# ஜெபிக்கிறவர்களுக்கு...

# ஜெயிக்கிறவர்களுக்கு!!!



# 1000

## ஜெப விண்ணப்பங்கள் . . .

– ஊழியர் . டைட்டஸ் காபிரியேல்

PLEASE SHARE THIS E-BOOK WITH YOUR FRIENDS, RELATIVES AND CHURCH BELIEVERS

## *To the Readers*

Dear Beloved Brother/Sister, Thank you for downloading this Ebook. Please note that this Ebook is copyrighted by the author of the book or the publisher of the book or as mentioned in the book. Word of God Ministries is just providing you this ebook as free of cost and it is for your personal use not for commercial purposes.

## *To the Copyright Owners*

We publish only the old books, the books which are in public domain and the books permitted by book publishers or authors. Word of God Ministries is doing this Free Ebook service to help the people who are not able to find the printed copy of your book from various countries arround the world and to the people who are restricted to have the printed materials in their house. This free service will help readers to improve their spiritual life.

To publish your books reach us at:

EMAIL US: wordofgod@wordofgod.in
SMS/WhatsApp : +91 7676505599,
+91 9739232425,
+91 9019049070

If you feel that your book should not be published, we are KINDLY REQUESTING YOU TO EMAIL US. We will remove it from our Free Service as early as possible.




## *About Word of God Ministries*

Our aim is to "Reach the Unreached through Technology". It is an interdenominational and inter-organizational ministry. And was very much popular by its first ministry "Word of God Team" all over the world. We all thank our God with full of our heart for using us in His Great Ministry.

Our FaceBook pages:
http://www.facebook.com/wordofgodteam
http://www.facebook.com/WordOfGodMinistriesInternational

Our Twitter Account: @WordOfGodTeam

Our Other websites: www.WordOfGod.in, www.IndianBibles.net
www.ChristiansMobile.com,




# 1000

## ஜெப விண்ணப்பங்கள்

(வேத வசனங்களோடு ஜெபித்திட)

என்னுடைய வீடு சகல ஜனங்களுக்கும் ஜெபவீடு

எனப்படும்

– ஏசாயா 56:7

... நாமே அவருடைய வீடாய் இருப்போம்.

–எபிரேயர் 3:4–6

நூல் 1000 ஜெப விண்ணப்பங்கள்

ஆசிரியர் Y. Titus Gabriel

பதிப்பு முதற் பதிப்பு செப்டம்பர் 2011

பிரதிகள் 5,000

வெளியீடு Y. Titus Gabriel
Udumalpet
97907 10189

காணிக்கை ₹.30/-

புத்தக வடிவமைப்பு King's Net
Udumalpet. Cell: 9944664868

அச்சகம் Jayam Offset Printers
Tirupur. Cell: 9442735847

Glory to Jesus




**Muzhangal Yuttham**
46/AA, Shanthi Nagar West,
Hosur - 635 109.
Ph: 04344 - 221616, 226363
E-mail: muzhangalyuttham@yahoo.com

"Prepare for war! Wake up the mighty men (Prayer warriors)" (Joel 3:9)

23.08.2011

## அணிந்துரை

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துக்கள்.

தம்பி டைட்டஸ் காபிரியேல் அவர்களுக்காகக் கர்த்தரைத் துதிக்கிறேன். தேவன் தம்பியின்மேல் ஜெப அபிஷேகத்தை அளவில்லாமல் ஊற்றி அகில உலகத்திற்காய் ஜெபிக்க பாரப்படுத்தியிருப்பதால்தான் பல மணிநேரங்கள் தேவசமுகத்தில் ஜெபிக்க 1000 ஜெபவிண்ணப்பங்கள் என்கிற இந்தப் புத்தகத்தை எழுதியிருக்கிறார். இதனைப் படித்தபோது கர்த்தருக்குள் மிகவும் சந்தோஷம் அடைந்தேன். ஜெபிக்க விருப்பமுள்ளவர்களுக்கும், பாரமுள்ளவர்களுக்கும் இப்புத்தகம் ஒரு நல்ல வழிகாட்டியாக அமையும் என்பதில் சந்தேகமில்லை. இதனை வாசித்து வேதவசன ஆதாரத்தோடு ஜெபிக்கும்போது ஒவ்வொருவருக்குள்ளும் தேவன் வைத்திருக்கிற ஜெப அபிஷேகம் அனல் மூட்டப்படுவதோடு, அதிக ஜெபபாரத்தாலும் நிரப்பப்படுவார்கள் என்று கர்த்தருக்குள் விசுவாசிக்கிறேன்.

இப்புத்தகத்தை வெளியிடும் தம்பிக்காக ஒவ்வொருவரும் ஜெபியுங்கள். இவர்மூலம் இதுபோன்ற இன்னும் அநேக ஜெபப்புத்தகங்கள் வெளிவர தேவன் கிருபை செய்வாராக. ஆமென்.

தேவகிருபை உண்டாவதாக.
அன்பும் ஜெபமும்

கிறிஸ்துவின் பணியில்
ஊழியர் L. ஜோசப்

"God saw that there was no man, and wondered that there was no intercessor" (Isaiah 59:16)

Rev D Mohan
Senior Pastor





# முன்னுரை

கிறிஸ்துவில் பிரியமானவர்களுக்கு

இயேசு கிறிஸ்துவின் இனிய நாமத்தில் வாழ்த்துக்கள்

நான் பிரதானமாய்ச் சொல்லுகிற புத்தியென்னவெனில், எல்லா மனுஷருக்காகவும் விண்ணப்பங்களையும் ஜெபங்களையும் வேண்டுதல்களையும் ஸ்தோத்திரங்களையும் பண்ணவேண்டும், நாம் எல்லாப் பக்தியோடும் நல்லொழுக்கத்தோடும் கலகமில்லாமல் அமைதலுள்ள ஜீவனம்பண்ணும்படிக்கு, ராஜாக்களுக்காகவும், அதிகாரமுள்ள யாவருக்காகவும் அப்படியே செய்யவேண்டும். நம்முடைய இரட்சகராகிய தேவனுக்குமுன்பாக அது நன்மையும் பிரியமுமாயிருக்கிறது

1 தீமோத்தேயு 2:1,2,3

தேவனுக்கு முன்பாக தேவனுக்குப் பிரியமான ஜெப ஊழியம் செய்வதற்கு தேவன் அழைத்திருக்கிறார்.

பரிசுத்த ஆவியில் நிறைந்து தேவ சமுகத்தில் எழுப்புதலுக்காக ஜெபிக்கவும், அழிந்து போகிற மக்களை ஆதாயம் செய்யவும், இந்தியாவை மட்டுமல்லாமல் முழு உலகத்திற்காக ஜெபிக்கவும் அருமையான ஜெபக் குறிப்புகளை ஊழியர் டைட்டஸ் காபிரியேல் அவர்கள் தொகுத்து மிக அருமையாக இந்த புஸ்தகத்தில் வழங்கியுள்ளார். கர்த்தர் தாமே அவரையும் அவர் தகப்பன் போதகர் ஏசையன் அவர்கள் குடும்பத்தையும் மேன்மேலும் ஆசீர்வதித்து உயர்த்துவாராக.

இவருடைய இந்த பெரிய முயற்சி மெய்யாகவே திருச்சபைகளுக்கு ஆசீர்வாதமாக இருக்கும் என்பதில் சந்தேகமே இல்லை.

இந்த புஸ்தகத்தில் உள்ள ஜெபக் குறிப்புகளை வேத வசனத்தோடு வாசித்து விசுவாசித்து ஜெபிக்கும்படி உங்களை அன்புடன் உற்சாகப்படுத்துகிறோம்.

இப்படிக்கு
கிறிஸ்துவின் பணியில்



Rev.D.Mohan.

New Life AG Church
# 6 Anna Salai, Little Mount, Chennai - 600 015. India
Tel : 91 44 2235 3100 Fax : 91 44 2230 1126 e-mail : nlag@nlag.in



**ASSEMBLIES OF GOD CHURCH**
[Affiliated to the Tamil District Council of SIAG, Reg. No.2701, Societies Act of 1860]
55, Bazeer Ahmed Street, Udumalpet - 642 126
Cell: 98420 83949, 98429 34021, 92456 15547
E-Mail : agchurchudt@gmail.com

Rev. A.YESSIAN

Date: 15.09.2011



# வாழ்த்துரை

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே,

ஆண்டவராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் வாழ்த்துதல்.

ஒவ்வொரு கிறிஸ்தவனுடைய வாழ்க்கையிலும் **ஜெபம், வசனம்** முதுகெலும்பு போல உள்ளது. ஆகவே இப்புத்தகம் வசன ஆதாரத்துடன் ஜெபிக்க வேண்டிய காரியங்களுக்காக வாசித்து ஜெபிக்க உதவியாக உள்ளது. நீதி.18:21-ம் வசனத்தில் "மரணமும் ஜீவனும் நாவின் அதிகாரத்திலிருக்கும். அதில் பிரியப்படுகிறவர்கள் அதின் கனியைப் புசிப்பார்கள்," என்று கூறப்படுகிறது. தேவன் கொடுத்த அதிகாரத்தைச் செயல்படுத்துவோம். எசே.9:4-6-ம் வசனங்களில், "நகரம் எங்கும் உருவப்போய், அதற்குள்ளே செய்யப்படுகிற சகல அருவருப்புகளினிமித்தமும் பெருமூச்சுவிட்டழுகிற மனுஷரின் நெற்றிகளில் அடையாளம் போடு என்றார்" என்று பார்க்கிறோம். தேவனுடைய தீர்ப்பு வரும்பொழுது அடையாளம் போடப்பட்டவர்களைக் கிட்டிச் சேராமல் முதியோரையும் வாலிபரையும் கன்னியரையும் குழந்தைகளையும் ஸ்திரீகளையும் கொன்று போடுங்கள் என்று கூறப்படுகிறது.

அப்படியானால் ஜெபம் எவ்வளவு முக்கியம் என்பதை உணர்ந்த என்னுடைய இரண்டாவது மகன் டைட்டஸ் எழுதியுள்ள ***1000 ஜெப விண்ணப்பங்கள்*** உங்கள் வாழ்க்கைக்கு மிகவும் உதவுவதோடு, ஜெபிக்கக் கூடிய வாஞ்சையையும், ஊக்கத்தையும் ஏற்படுத்தும் எனவும் உங்கள் விசுவாசத்தை உறுதிப்படுத்தும் என்றும் விசுவாசிக்கிறேன். இன்னும் பல ஆவிக்குரிய புத்தகங்களை எழுதவும், பல மக்களுக்கு ஆசீர்வாதமாக இருக்கவும் என்னுடைய வாழ்துக்கள்.

கிறிஸ்துவின் பணியில்

Yessian

(Rev.Y.ஏசையன்)

## ஆசிரியர் உரை...

ஒரு **எலியா** போதும் அந்த முழு தேசத்திற்கும் பெருமழை பெய்வதற்கு...
ஒரு **மனிதன்** போதும் தேசத்தை அழிக்காதபடி, திறப்பிலே நிற்கவும்,
சுவரை அடைக்கவும் ...

நீங்கள் மற்றவர்களுக்காய் ஏறெடுக்கின்ற ஒவ்வொரு ஊக்கமான ஜெபங்களும், விண்ணப்பங்களும், ஒருநாளும் ஒரு பொழுதும் வீணாய் போவது இல்லை. இதற்கு நான் ஒரு சாட்சியாக இருக்கிறேன். ஏனென்றால் நான் பாவத்திலே வாழ்ந்து கொண்டிருக்கும் போது நான் இரட்சிப்படைய போதகர்களும், சபையிலே என் தாயாரும் ஜெபித்தார்கள்.

அந்த ஜெபத்திற்கு பதில் 3 வருடங்களுக்குப் பின் ஒரு நாளில் நிறைவேறியது.

நான் இரட்சிக்கப்பட்ட பின்பு, ஒருமுறை நான் கிண்டல், கேலி செய்த பாஸ்டர் (ஏனென்றால் எனக்கு பாஸ்டர் என்றாலே சுத்தமாய் பிடிக்காது) ஒருவரை பார்க்க நேர்ந்தது, அப்போது அவரைப் பார்த்து சொன்னேன், பாஸ்டர் நான் இரட்சிக்கப்பட்டு வேதாகமக் கல்லூரியில் படித்துக் கொண்டு இருக்கிறேன் என்று நான் சொன்னவுடனே, அவருக்குள் அப்படியொரு சந்தோஷம், அவர் என்னிடம் 'Brother உங்களுக்காக நான் 5 வருடமாக ஜெபித்துக் கொண்டிருக்கிறேன்' என்றார்.

கர்த்தருக்குள் பிரியமானவர்களே! நீங்கள் ஒருவர் இரட்சிக்கப்பட வேண்டும் என்பதற்காய் செய்யும் ஜெபங்களுக்கு நிச்சயமாக பதில் கிடைக்கும். அந்த ஜெபத்தின் பலனை நீங்கள் ஓர் நாளில் காண்பீர்கள். அற்ப மனிதன் சாதாரணமாக ஜெபித்து அசாதாரணமான காரியங்களை அவனால் செயல்படுத்த முடியும். அதுதான் ஜெபத்தின் வல்லமை.

இந்த புத்தகம் உங்களை குறித்தான தேவசித்தம் இல்லாமல் உங்கள் கைகளில் கிடைக்க வாய்ப்பு இல்லை என்றுதான் நான் சொல்ல வேண்டும். ஏனென்றால் ஒன்றுக்கும் உபயோகமற்றவனாய் இருந்த அப்பிரயோஜனமற்ற என்னைக் கொண்டு தேவன் இப்புத்தகத்தை எழுத ஞானம் கொடுத்தார் என்றால், அதே தேவன் உங்களை உங்கள் பகுதிகளில் வல்லமையாய் எடுத்து பயன்படுத்தவும், பெரிய காரியங்களை உங்கள் மூலமாய் செய்ய முடியும் என நான் விசுவாசிக்கிறேன்.

தேவன் உங்கள் மீது வைத்திருக்கும் சித்தம், திட்டத்தை அறிந்து, அப்பா இயேசுவைப் போல ஜெபிப்போம். சுவிசேஷத்தையும், கடைசி நாட்களைக் குறித்து நமக்கு தெரிந்ததை பிறருக்குத் தெரியப்படுத்துவோம். எழுப்புதலின் பங்குள்ளவர்களாய் மாறுவோம்.

எங்களுக்காய் ஜெபியுங்கள்...யோபு 6:24-ன்படி நான் எதிலே தவறினேனோ அதை எனக்குத் தெரியப்படுத்துங்கள். தேவன் தாமே உங்களை பரலோக மற்றும் பூலோக ஆசீர்வாதங்களினால் பெருக செய்வாராக.

கிறிஸ்துவின் பணியில்,
ஊழியர் Y. டைட்டஸ் காபிரியேல்,

## நன்றி உரை

கர்த்தருடைய பரிசுத்த நாமத்திற்கு மகிமையுண்டாவதாக.

கர்த்தருடைய பெரிதான கிருபையால் இப்புத்தகத்தை உங்கள் கரங்களில் கிடைக்கச் செய்த என் தேவாதி தேவனுக்கு முதலாவது நன்றி செலுத்துகிறேன்.

மேலும் என் சகோதரன் பாஸ்டர் Y. மோரிஸ் ராஜாவுக்கும் மற்றும் என் குடும்பத்தினர் அனைவருக்கும் என் ஆவிக்குரிய வளர்ச்சிக்கு உதவிய பாஸ்டர் M J காலேப், பாஸ்டர் ஜான்சன், பாஸ்டர் V. S. சாமுவேல்ராஜ், பாஸ்டர் B. A. பரமானந்தம் ஆகிய மேய்ப்பர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மற்றும் எனக்கு தேவன் கொடுத்த ஆவிக்குரிய நண்பர்கள் மற்றும் இந்த புத்தகம் வெளிவருவதற்காக ஜெபித்த, கொடுத்த, உழைத்த ஒவ்வொருவருக்கும் நன்றி கூறிக்கொள்கிறேன்.

இப்புத்தகத்தில் உள்ள ஒவ்வொரு ஜெப விண்ணப்பதையும் அதன் வேத வசனத்தைச் சொல்லி விசுவாசத்தோடு ஜெபிக்கவும். மேலும் ஒருமுறை புத்தகத்தை படித்து ஜெபித்து முடித்தவுடன் நிற்காமல் பதில் பெரும் வரையில் தொடர்ந்து ஜெபித்து ஜெயம் பெறுவோம்.

# உள்ளே---



# 1. உலகத்திற்காக ஜெபிப்போம்

## 1. PRAY FOR OUR WORLD

1. உலகத்தில் உள்ள எல்லா மக்களும் இரட்சிக்கப்படவும் தேவன் அவர்களை ஆசீர்வதிக்கவும் ஜெபிப்போம் – ஆதியாகமம் 5:2
2. எல்லா நாடுகளிலும் காணப்படுகின்ற வறுமைகள் எல்லாம் மாறிட ஜெபிப்போம் – ஆதியாகமம் 45:11
3. ஒவ்வொரு நாட்டின் பொருளாதாரத் தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம் – மத்தேயு 6:8
4. ஒவ்வொரு நாட்டிலும் பெருக்கெடுத்து வரும் எல்லோருடைய பாவங்கள் மன்னிக்கப்படவும், குறையவும் ஜெபிப்போம் – மாற்கு 2:10
5. குறைந்தது 10 நாடுகளின் பெயர்களை எழுதிவைத்து, சொல்லி ஜெபிப்போம் – உபாகமம் 33:16
6. தேசங்களில் கொள்ளை நோய் வராமல் இருக்க ஜெபிப்போம் – சங்கீதம் 91:3,6
7. ஒவ்வொரு நாட்டிற்கும் பக்கத்தில் உள்ள நாடுகளோடு சுமூகமான உறவுகள் பலப்படவும், சண்டைகள் வராமல் சமாதானமாய் காணப்பட ஜெபிப்போம் – 1 நாளாகமம் 22:9
8. தேசங்களில் பஞ்சங்கள் வராதபடி தேவன் காத்திட ஜெபிப்போம் – எசேக்கியேல் 36:30
9. இக்கடைசி நாட்களில் ஏற்படும் இயற்கை சீற்றத்தால் ஏற்படுகின்ற அழிவின் மூலம் மக்கள் உண்மை தேவனை அறிந்திட ஜெபிப்போம் – பிரசங்கி 12:1,7
10. தேசங்களில் காணப்படும் தகாத உறவுகள் வேரோடு அகன்று போக ஜெபிப்போம் – யூதா 1:7
11. உலகம் முழுவதும் காணப்படுகின்ற தீவிரவாதங்கள் அடியோடு மறைந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 10:23
12. எல்லா நாடுகளும் ஒற்றுமையுடன் காணப்பட ஜெபிப்போம் – எபேசியர் 2:19
13. இக்கடைசி நாட்களில் ஏற்படவிருக்கும் பூமியதிர்ச்சி, நிலநடுக்கம் இவற்றின் மூலம் வரும் பாதிப்புகளிலிருந்து தேசங்கள் காப்பாற்றப்பட ஜெபிப்போம் – மத்தேயு 24:7
14. தேசங்களில் காணப்படும் அடிமைத்தனங்கள் அகன்று போக ஜெபிப்போம் – எபிரேயர் 2:15
15. சுவிசேஷம் எல்லா நாடுகளிலும் பரவி சென்றடைய ஜெபிப்போம் – மத்தேயு 24:14

16. உலக வரைபடத்தைப் பார்த்து, அதன் மேல் கைகளை வைத்து விசுவாசித்து ஜெபிப்போம் – ஆதியாகமம் 13:15
17. தேசங்களில் காணப்படும் எல்லா வகையான சூதுகள், சூதாட்டங்கள் குறைந்திட ஜெபிப்போம் – எபேசியர் 4:14
18. தேசங்களிலே பரவிக் கொண்டிருக்கும் கருக்கலைப்புகள் இல்லாமல் போக ஜெபிப்போம் – சங்கீதம் 127:4
19. உலகம் முழுவதிலும் காணப்படுகின்ற கற்பழிப்புகள் இல்லாமல் போக ஜெபிப்போம் – 2 சாமுவேல் 13:14,15
20. எல்லா நாடுகளிலும் காணப்படுகின்ற மதுபானப்பிரியர்கள், குடிக்கு அடிமைப்பட்டவர்கள் மனந்திரும்பிட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 23:29,30
21. உலகம் முழுவதும் காணப்படுகின்ற போதை பொருட்களுக்கு அடிமையானவர்கள் விடுதலையாகி திருந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 23:35
22. உலகம் முழுவதிலும் விக்கிரக ஆராதனையில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் மாறிட ஜெபிப்போம் – நியாயாதிபதிகள் 10 :16
23. தேசங்களிடையே காணப்படும் பகை விரோதங்கள் மாறிட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 10: 12
24. தேசங்களில் காணப்படும் வேசித்தனங்கள் வேறெடுக்கப்பட ஜெபிப்போம் – 1 கொரிந்தியர் 6 :13,18
25. உலகில் காணப்படும் கள்ள போதகங்களிலிருந்து மக்கள் தங்களை காத்திட ஜெபிப்போம் – எபிரேயர் 13 :9
26. உலகில் காணப்படும் கள்ள உபதேசங்களை நம்பி வஞ்சனைக்கு உட்படுகிறவர்கள் விசுவாசத்தை விட்டு விலகாமல் இருக்க ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 4:1
27. உலகில் கள்ள தீர்க்கதரிசிகளை பின்பற்றுகிறவர்களின் நிலை மாறிட ஜெபிப்போம் – மத்தேயு 7:15
28. உலகில் கர்த்தரால் தெரிந்து கொள்ளப்பட்டவர்கள் வஞ்சிக்கப் படாமல் தங்களைக் காத்திட ஜெபிப்போம் – மத்தேயு 24:24
29. உலகில் பரவிக்கொண்டு இருக்கிற சாத்தானை ஆராதிக்கின்ற கூட்டங்கள், சபைகள் தகர்க்கப்பட ஜெபிப்போம் – 2 கொரிந்தியர் 4:4
30. உலகில் கள்ளப் போதனைகள் செய்பவர்கள் மாறிட, அவர்களை விசுவாசிகள் பின்பற்றாமல் தங்களைக் காத்துக் கொள்ள ஜெபிப்போம் – 2 பேதுரு 2 :1
31. உலகில் காணப்படும் பிசாசின் உபதேசங்கள் செய்பவர்கள் மாறிட ஜெபிப்போம்– 1 தீமோத்தேயு 4 :1



32. உலகில் கள்ள மற்றும் பொய் தீர்க்க தரிசனங்கள் சொல்கிறவர்கள் திருந்திட ஜெபிப்போம் – எரேமியா 14 :14
33. உலகமெங்கும் மதத்தின் பெயரைத் தரித்து ஏமாற்றுகிறவர்கள் மாறிட ஜெபிப்போம் – சகரியா 11 :16
34. உலகில் ஏற்படும் கொலைகள், கொலை எண்ணங்கள் முற்றிலும் இல்லாமல் போக ஜெபிப்போம் – யோவான் 8 :44
35. உலகில் பல ஆண்டுகளாய் படுத்தபடுக்கையில், மரணத் தருவாயில் தவிக்கின்றவர்களை தேவன் காப்பாற்றிட ஜெபிப்போம் – சங்கீதம் 41 :3
36. உலகில் காணப்படும் தரித்திரங்கள் யாவும் மறைந்திட ஜெபிப்போம் – 1 சாமுவேல் 2 :7
37. உலகில் காணப்படும் நயவஞ்சகங்கள் எல்லாம் மாறிட ஜெபிப்போம் – 1 யோவான் 3 :7
38. உலகில் உள்ள ஒவ்வொரு குடும்பங்களிடையே காணப்படும் பகைமைகள் எல்லாம் மாறிட ஜெபிப்போம் – மத்தேயு 5 :44
39. உலகில் கணவன் – மனைவியிடையேயான கருத்து வேறுபாடுகள் மாறிட ஜெபிப்போம் – கொலோசெயர் – 3 :18, 19
40. உலகில் பிள்ளைகள் – பெற்றோர்களிடையே காணப்படும் பகைமைகள் மாறிட ஜெபிப்போம் – கொலோசெயர் – 3 :20,21
41. உலகில் சகோதரர்களிடையே ஏற்படும் பகை, சண்டை, விரோதங்கள் எல்லாம் மாறிட ஜெபிப்போம் – 1 யோவான் 4 :20
42. உலகில் ஏற்படும் மரணங்களிலிருந்து தேவன் ஒவ்வொருவரையும் காத்திட ஜெபிப்போம். –வெளிப்படுத்தின விசேஷம் 1 :18
43. உலகில் விஷப்பூச்சிகளினால் ஏற்படும் மரணங்களிலிருந்து மக்களை தேவன் காத்திட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 28 :4,5
44. உலகில் அகால மரணம், விபத்துக்கள் குறைந்திட ஜெபிப்போம் – சங்கீதம் 48 :14
45. விலங்குகளினால் மக்களுக்கு ஏற்படும் மரணங்கள், பாதிப்புகள் குறைந்திட ஜெபிப்போம் – சங்கீதம் 68 :20
46. உலகில் மக்களிடையே உள்ள மலட்டுத்தன்மைகள் இல்லாமல் போக ஜெபிப்போம் – உபாகமம் 7: 14
47. தேசங்களில் காணப்படும் கர்ப்பத் தடைகள், கருக்கலைப்பு எல்லாம் மாறிட ஜெபிப்போம் – யாத்திராகமம் 23 :26
48. உலகில் குறைகள் உள்ள குழந்தைகள் பிறக்காமல், ஆரோக்கிய மான குழந்தைகள் பிறக்க, தேவன் அருள் புரிந்திடஜெபிப்போம் – ஆதியாகமம் 50 :21

49. உலகில் பணத்திற்காக என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்கிறவர்களின் நிலைகள், எண்ணங்கள் மாறிட ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 3 :2
50. உலகில் பெயர், புகழுக்காக என்ன வேண்டுமானாலும் செய்யலாம் என்கின்ற நிலை எண்ணங்கள் மாறிட ஜெபிப்போம் – கலாத்தியர் 5: 26
51. உலகில் காணப்படும் மனித வழிபாடுகள் அகன்று போக ஜெபிப்போம் – மத்தேயு 18: 7
52. உலகில் சுவிசேஷத்தை அறிவிக்கத்தக்க தாகமுள்ள, பாரமுள்ள சுவிசேஷகர்கள் எழும்பி வர ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 4:5
53. உலகெங்கும் சுவிசேஷத்தை கேட்டவர்கள் அதை விசுவாசித்து பலன் தந்திட ஜெபிப்போம் – கொலோசெயர் 1 :6
54. உலகத்தில் உள்ள சர்வ சிருஷ்டிகளுக்கும் சுவிசேஷம் முழுமையாய் சென்றடைய ஜெபிப்போம் – கொலோசெயர் 1 :23
55. உலகம் முழுவதிலும் ஆண்டவரின் வார்த்தையை அறிவிக்கத்தக்க உண்மையான, போதகர்கள், சுவிசேஷகர்கள், ஊழியர்கள் ஆகியோரை தேவன் எழுப்பிட ஜெபிப்போம் – நியாயாதிபதிகள்1 :2
56. தேசங்களையும், தேசங்களில் உள்ளவர்களையும் தேவன் பாதுகாத்து நடத்திடவும், புலம்பலிலிருந்து தேசத்தை தேவன் காப்பாற்றிட ஜெபிப்போம் – ஓசியா 4: 3
57. ஒவ்வொரு தேசத்திலும் உண்மை தேவனைப் பற்றிய அறிவு மக்களுக்கு கிடைத்திட ஜெபிப்போம் – ஓசியா 4 :1
58. தேசங்களிலே உண்மைகள் ஒழுக்கங்கள் இறக்கம் மேலோங்கிட ஜெபிப்போம் – ஓசியா 4: 1
59. உலகில் ஆரோக்கியமான தூய, சுத்தமான தண்ணீர் தாராளமாய் கிடைக்க ஜெபிப்போம் – யாத்திராகமம் 23 :25
60. எல்லா தேசத்திலும் விபச்சாரத்தில் காணப்படுகிறவர்கள் தங்கள் தவறை உணர்ந்து, தேவனிடம் மன்னிப்பை பெற்று திருந்தி வாழ்ந்திட ஜெபிப்போம் – யோவான் 8: 11
61. ஒவ்வொரு தேசத்தை ஆளுகின்ற எல்லா அதிகாரிகளுக்காக ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 2: 1,2
62. இப்பொழுது ஒவ்வொரு தேசங்களிலும் சிறைக்கைதிகளாகவும், அடிமைகளாகவும் காணப்படுகிற ஒவ்வொருவரின் பாவங்களையும் தேவன் மன்னித்து இரட்சிக்க ஜெபிப்போம் – உபாகமம் 30: 3
63. உலகில் பலவகையான அநியாயங்களை செய்கிறவர்கள் மாறிட ஜெபிப்போம் – மல்கியா 3 :5
64. உலகிலே பலவகையான பாவத்தில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள், தேவனிடம் அதற்கான மன்னிப்பை பெற்றிட ஜெபிப்போம் – சகரியா 13: 1



65. உலகத்தில் தினமும் எத்தனையோ ஆயிரமாயிரமான ஜனங்கள் மரிக்கின்றார்கள், அவர்களுக்காய் ஊக்கமாய் ஜெபிப்போம் – எசேக்கியேல் 33 :8
66. எருசலேமின் சமாதானத்திற்காய் ஜெபிப்போம் – சங்கீதம் 122 :6,7
67. உலகில் மனிதர்களுக்குள்ளே காணப்படும் பரியாசங்கள், கேலி, கிண்டல் ஒழிந்துபோக ஜெபிப்போம் – எபேசியர் 5 :4
68. உலகில் பார்வையில்லா குருடர்களை தேவன் வழிநடத்தி காத்திட ஜெபிப்போம் – ஏசாயா 42 :16
69. தேவன் அருவருக்கும் பாவங்கள் தேசங்களில் காணப்படாதிருக்க ஜெபிப்போம் – நீதிமொழிகள் 6 :16–19
70. தேசங்களிடையேயும், தேசத்திற்குள்ளும் காணப்படும் சண்டைகள் குறைந்திட ஜெபிப்போம் – யாக்கோபு 4: 1
71. உலகில் காணப்படும் சோம்பேறிகள் மாறிட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 19 :24
72. உலகில் ஏமாற்றுக்காரர்கள் மனந்திரும்பிட ஜெபிப்போம் – ஆதியாகமம் 32 :27
73. குறிசொல்கிறவர்கள் இல்லாமல் போக ஜெபிப்போம் – எசேக்கியேல் 12 :24
74. எல்லா நாடுகளிடையேயும், எல்லா மக்களிடையேயும், எல்லா குடும்பங்களிடையேயும் கர்த்தர் சமாதானத்தை தந்திட ஜெபிப்போம் – யோவான் 14 :27
75. உலகில் உள்ள எல்லா இசைக்கருவிகள் வாசிப்போருக்காய் ஜெபிப்போம் – 2 ராஜாக்கள் 3 :15
76. உலக மக்கள் மெய் தேவனை பின்பற்றி, நித்திய ஜீவனை பெற்றுக் கொள்ள தகுதியுள்ளவர்களாய் மாறிட ஜெபிப்போம் – 1 யோவான் 5 :20
77. ஆகாரங்கள் பற்றாக்குறையின்றி எல்லோருக்கும் தாராளமாய் கிடைத்திட ஜெபிப்போம் – சங்கீதம் 145 : 15
78. தேசங்களிலே காணப்படும் லஞ்ச, லாவண்யங்கள் எல்லாம் முற்றிலும் இல்லாமல் போக ஜெபிப்போம் – உபாகமம் 16 :19
79. தேசங்களிலே வறட்சிகள் மாறி, தேசங்கள் தன் பலனை தந்திட தேவனை நோக்கி ஜெபிப்போம் – சகரியா 8 :12
80. உலகில் காணப்படும் போஜனப் பிரியர்கள் எல்லாரும் மாறிட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 23 : 2,3
81. தேசங்களில் காணப்படும் விவாகரத்துகள் முற்றிலும் குறைந்திட ஜெபிப்போம் – மல்கியா 2 : 16
82. தேசங்களில் உள்ள ஒவ்வொரு சபைகளும் 24 மணி நேரமும் தொடர்ந்து ஆண்டவரை துதித்து ஸ்தோத்திர ஆராதனைகளை ஏறெடுத்திட ஜெபிப்போம் – எபிரேயர் 13 : 15

83. உலகெங்கும் சபைகளில் நடைபெறும் ஒவ்வொரு ஆராதனைகளிலும் ஆவியானவரின் கிரியைகள், ஆளுகைகள், பிரசன்னம், மகிமை அளவில்லாமல் காணப்பட ஜெபிப்போம் – ஆகாய் 2 : 9
84. ஒவ்வொரு நாட்டின் President–ம் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 8 : 16
85. உலகெங்கும் ஒவ்வொரு நாளும், தேவனிடமும் தேவ சமூகத்திற்கும் புதிய புதிய ஆத்துமாக்கள் ஆயிரமாயிரமாய் கடந்து வந்திட ஜெபிப்போம் – ஏசாயா 55 : 5
86. தேவ பிள்ளைகள் அனைவரும் உலக, மாம்ச இச்சைகளில் விழாதபடி தங்களை காத்திட ஜெபிப்போம் – மாற்கு 4 : 18
87. தேசமெங்கும் காணப்படும் சபை போதர்களுக்காய் உண்மையாய் உத்திரவாதத்தோடு ஜெபிப்போம் – எபேசியர் 6 : 18
88. உலகெங்கும் சபைகளில் துதி மற்றும் பாடல் ஆராதனை நடத்தும் தேவபிள்ளைகளை தேவன் வல்லமையாய் அபிஷேகித்து பயன்படுத்திட ஜெபிப்போம் – 1 கொரிந்தியர் 14 : 15
89. உலகெங்கும் சபைகளில் இசைக்கருவிகள் வாசிப்பவர்கள் நேர்த்தியாய் ஆண்டவர் நாமம் மகிமைக்கென மாத்திரமே வாசித்திட ஜெபிப்போம் – 1 நாளாகமம் 15 : 21
90. ஆண்டவரை நன்கு அறிந்த அவரின் பிள்ளைகள், எங்குமே என்றுமே பின்மாறி சாபத்திற்குள்ளாகிவிடாதபடி ஜெபிப்போம் – உபாகமம் 28 : 45
91. எங்கும் உள்ள தேவப்பிள்ளைகள் இப்பூமியின் பொக்கிஷங்களுக்காய் இல்லாமல், பரலோக பொக்கிஷங்களுக்கு தங்களை அர்ப்பணித்திட ஜெபிப்போம் – மத்தேயு 19 : 12
92. எல்லா மக்களுக்கும், தேவ பிள்ளைகளும் பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தை பெறுவதற்கு தகுதியுள்ளவர்களாய் மாறிட ஜெபிப்போம் – யோவேல் 2 : 28
93. உலகெங்கும் உள்ள சபை மக்களிடையே ஆவியின் வரங்கள் பகிர்ந்திளிக்கப்பட ஜெபிப்போம் – 1 கொரிந்தியர் 12 : 11
94. உலகெங்கும் உள்ள சபை மக்கள் நற்குணத்திலே நிறைந்தவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – ரோமர் 15 : 14
95. தேவபிள்ளைகள் ஒவ்வொருவரும் தேவனுடைய கற்பனைகளினால் தங்கள் வாழ்க்கையை காத்திட ஜெபிப்போம் – வெளிப்படுத்தல் 14 :12
96. தேவப்பிள்ளைகள் ஒவ்வொருவரும் உலகக் கவலைகளில் கட்டப்பட்டவர்களாய் காணப்படாதபடி இருக்க ஜெபிப்போம் – மாற்கு 4 :18
97. தேவப்பிள்ளைகள் ஒவ்வொருவரும் தங்கள் சரீரத்தை பரிசுத்தமாய் ஒவ்வொரு நாளும் காத்திட ஜெபிப்போம் – 1 கொரிந்தியர் 6: 19



98. தேவபிள்ளைகள் ஒவ்வொருவரும் சகல அறிவினால் நிரப்பப்பட்டவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – ரோமர் 15: 14
99. உண்மையாய் ஊழியத்திற்கு ஒத்துழைக்க, உதவிசெய்ய, தாங்கிட ஆட்களை தேவன் சபைகளிலே ஏற்படுத்திட ஜெபிப்போம் – ரோமர் 16: 4
100. உலகெங்கும் சபைக்கும், சத்தியத்திற்கும், போதகருக்கும் எதிர்த்து நிற்பவர்கள் மாறிட ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 4: 15
101. தேவன் ஒவ்வொரு சபைகளிலும் இரவு பகலாய் ஜெபிக்கக் கூடிய தேவபிள்ளைகளை எழுப்ப ஜெபிப்போம் – ஏசாயா 62: 6
102. ஒவ்வொரு தேசங்களிலும் வல்லமையான போதகர்கள் எழும்பி தேசத்தை சுதந்தரிக்க ஜெபிப்போம் – தீத்து 1 :5
103. ஒவ்வொரு தேசத்திலேயும் சுகவீனத்தோடு காணப்படுபவர்கள் சபைக்கு வந்து பூரண சுகம் பெற்றுச் செல்ல ஜெபிப்போம் – ஏசாயா 58 : 8
104. ஒவ்வொரு தேசத்திலேயும் வைராக்கியமாய் போதிக்கத்தக்க போதகர்கள் எழும்பிட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 9 : 31
105. ஒவ்வொரு தேசங்களில் உள்ள சபைகள் தேவனிடம் சமாதானம் பெற்று, பரிசுத்த ஆவியின் அபிஷேகத்தில் வளர்ந்து, பெருகி, பக்தியோடு தெய்வபயத்தில் காணப்பட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 9 : 31
106. உலகம் எங்கும் மக்களிடையே பரவிக்கிடக்கும் இருதயத்தின் இச்சைகள் மாறிட ஜெபிப்போம் – ரோமர் 1 : 24
107. தேசங்களிலே சத்தியத்தைப் பொய்யாய் மாற்றுகிற சபைகள் உண்மையான சத்தியத்திற்கு வந்திட ஜெபிப்போம் – ரோமர் 1 : 25
108. உலகெங்கும் உள்ள தேவப்பிள்ளைகளை தேவன் அசுத்தத்திற்கு ஒப்புக் கொடாமல் இரக்கம் காண்பித்திட ஜெபிப்போம் – ரோமர் 1 : 24
109. உலகெங்கும் உள்ள தேவப்பிள்ளைகளை தேவன் இழிவான இச்சை ரோகங்களுக்கு ஒப்புக் கொடுக்காமல் தயவு காட்டிட ஜெபிப்போம். –ரோமர் 1 : 26
110. உலகமெங்குமுள்ள தேவப்பிள்ளைகளை தேவன் கேடான சிந்தைக்கு ஒப்புக் கொடுக்காமல் கிருபை தந்திட ஜெபிப்போம். – ரோமர் 1 : 28



# 2. நம் மக்களுக்காக ஜெபிப்போம்

## 2. PRAY FOR OUR PEOPLES

1. எல்லா மக்களுக்கும், பிள்ளைகளுக்கும், வாலிபர்களுக்கும், கல்வி சரியான முறையில் கிடைத்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 2 : 6
2. எல்லா மக்களும் சகோதர சிநேகம் உடையவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – எபிரேயர் 13 : 1
3. எல்லா ஜனங்களும் ஒருமுறையாவது உண்மையான தெய்வம் இயேசு கிறிஸ்துவைப் பற்றி தங்களின் வாழ்க்கையில் அறிந்திட ஜெபிப்போம் – லூக்கா 2 : 10
4. மக்கள் கண்களினால் செய்கின்ற பாவங்கள் இல்லாமல் போக ஜெபிப்போம் – 1 யோவான் 2 : 16
5. மக்களின் சிந்தனையில் எழும்பும் பாவ எண்ணங்கள் மாற ஜெபிப்போம் – ரோமர் 1 : 21
6. மக்களிடையே காணப்படும் பொருளாசைகள் முற்றிலும் குறைந்திட ஜெபிப்போம் – எபேசியர் 5:5
7. மக்களிடையே இருக்கும் பொறாமை குணங்கள் முற்றிலும் இல்லாமல் போக ஜெபிப்போம் – ரோமர் 13 : 13
8. மக்களிடையே காணப்படும் விபச்சார எண்ணங்கள் முற்றிலும் இல்லாமல் போக ஜெபிப்போம் – மட்டேயு 5 : 27,28
9. மக்களிடையே கவர்ச்சியாக இச்சிக்கும் வகையில் உடையணியும் பழக்கம் இல்லாமல் போக ஜெபிப்போம் – உபாகமம் 22 : 5
10. உபதேசங்களிலே மக்கள் உண்மையான தெய்வம் யார் என்று தேடும் உணர்வுள்ளவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – சங்கீதம் 53 : 2
11. மக்களிடையே மன்னிக்கும் மனப்பான்மை மேலோங்கிட ஜெபிப்போம் – மத்தேயு 6 : 14, 15
12. மக்களின் பாவங்கள் பெருகாமல், தேவன் அவை அனைத்தையும் மன்னித்திட ஜெபிப்போம் – லூக்கா 5 : 24
13. மக்களிடையே காணப்படும் பாரம்பரிய கட்டுகள் ஒன்றுமில்லாமல் போக ஜெபிப்போம் – எரேமியா 2 : 20
14. மக்களிடையே பரவி காணப்படும் ஜென்ம சுபாவங்கள் முற்றிலும் மறைந்து, தெய்வீகத் தன்மை மலர ஜெபிப்போம் – 1 கொரிந்தியர் 2 : 14
15. மக்களிடையே காணப்படும் பரம்பரை வியாதிகள் இல்லாமல் போக ஜெபிப்போம் – யோவான் 5 : 6
16. மக்களிடையே உள்ள வீண் வாக்குவாதங்கள் எல்லாம் இல்லாமல் போக ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 2 : 14



17. மக்களிடையே உள்ள பொய்கள் இல்லாமல் போக ஜெபிப்போம். –யோவான் 8 : 44
18. இயேசு கிறிஸ்துவிற்கு விரோதமாய் கலகம் பண்ணுகிற அமைப்புகள், சங்கங்கள் கூட்டமெல்லாம் சந்திக்கப்பட ஜெபிப்போம் – எண்ணாகமம் 14 : 9
19. மக்களிடையே உள்ள பயங்கள் மாறிட ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 1 : 7
20. தேவன் ஏற்ற வேளைகளில் தேசங்களுக்கு மழையைத் தந்து செழிப்படையச் செய்ய ஜெபிப்போம் – உபாகமம் 11 : 14
21. மக்களின் மேல் தலைமுறை தலைமுறையாக உள்ள சாபங்கள் விலகிட ஜெபிப்போம் – 1 சாமுவேல் 3 : 13
22. மக்களின் பழக்க வழக்கங்கள் சரியான முறையில் காணப்பட ஜெபிப்போம். –உபாகமம் 14 : 22
23. வாலிப பிராயத்தில் வரும் பாவங்களிலிருந்து, வாலிபர்களை தேவன் பாதுகாத்திட ஜெபிப்போம் –யோபு 20 : 11
24. தேவன் வாலிபர்களுக்கு விஷேசித்த ஞானத்தை தந்திட ஜெபிப்போம் – தானியேல் 1 :17
25. மக்களிடையே காணப்படும் பண ஆசைகள் அற்றுப்போக ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 6 : 10
26. ஜனங்கள் தேவ வல்லமையைக் காண ஜெபிப்போம் – சங்கீதம் 77: 14
27. ஜனங்கள் தேவ மகிமையைக் காண ஜெபிப்போம் – யோவான் 11 : 40
28. சந்தோஷம், மகிழ்ச்சியின்றி தவிக்கும் மக்கள், இவற்றை இயேசு கிறிஸ்துவால் மட்டுமே தரமுடியும் என்பதை அறிந்து கொள்ள ஜெபிப்போம் – சங்கீதம் 16:11
29. மக்கள் இரக்ககுணம் உள்ளவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – ஓசியா 4:1
30. மரண பயத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் மக்கள் விடுதலை பெற்றிட ஜெபிப்போம் – எபிரேயர் 2:15
31. பல ஆண்டுகளாய் படுத்தபடுக்கையாய் காணப்படும் ஜனங்கள் சுகம் பெற்றிட ஜெபிப்போம் – யோவான் 5:6
32. அற்புதங்களின் மூலம் புறஜாதி மக்கள் அநேகர் நம் தேவனை விசுவாசித்திட ஜெபிப்போம் – யோவான் 11 : 45
33. மக்களிடையே உள்ள கொடிய தீராத நோய்கள் எல்லாம் குணமாகிட ஜெபிப்போம் – உபாகமம் 7: 15
34. மக்கள் தீமையை வெறுத்து நன்மை செய்கிறவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – சங்கீதம் 34: 14
35. கஷ்டப்பட்டு வேலைசெய்கிறவர்கள் அதின் பிரயாசத்தை பெற்றிட ஜெபிப்போம் – சங்கீதம் 128: 2
36. மக்களிடையே காணப்படும் விரோதங்கள் அனைத்தும் மறைந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 10:12

37. நாள், நட்சத்திரம் பார்க்கின்ற மக்கள் மாறிட ஜெபிப்போம் – லேவியராகமம் 19 : 26
38. மக்களிடையே உள்ள கசப்புகள் மாறிட ஜெபிப்போம் – எபேசியர் 4 : 31
39. மக்களை தூஷிப்பவர்கள் திருந்திட ஜெபிப்போம் – தீத்து 3 :2
40. மக்களை சபிப்பவர்கள் திருந்திட ஜெபிப்போம் – யாக்கோபு 3 : 9,10
41. மக்களிடையே உள்ள துர்குணங்கள் முற்றிலும் மறைந்திட ஜெபிப்போம் – யாக்கோபு 1 :21
42. மக்களிடையே உள்ள துரோகங்கள், நம்பிக்கை துரோகங்கள், விசுவாச துரோகங்கள் மறைந்திட ஜெபிப்போம் – 2 தெசலோனிக்கேயர் 2 :3
43. மக்களிடையே உள்ள பெலவீனங்கள் மாறிட ஜெபிப்போம் – ஏசாயா 58 :8
44. மக்களிடையே உள்ள எரிச்சல்கள் மாறிட ஜெபிப்போம் – சங்கீதம் 37: 8
45. பணத்திற்காக, வியாபாரத்திற்காக, மக்களை ஏமாற்றுகிறவர்கள் தாங்கள் அப்படி செய்வது தவறு என்பதை புரிந்து கொண்டு மாறிட ஜெபிப்போம் – ஆபகூக் 2 :9
46. பதவிக்காக, வியாபாரத்திற்காக, பணத்திற்காக மக்களை கொலை செய்கிறவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – ஆபகூக் 2: 12
47. மக்களின் குறைவுகளை தேவன் நிவர்த்தியாக்கிட ஜெபிப்போம் –சங்கீதம் 34: 10
48. மக்களிடையே உள்ள வீண்தர்க்கங்கள், சண்டைகள் அறவே இல்லாமல் போக ஜெபிப்போம் – தீத்து 3: 9
49. எல்லா மக்களும் சந்தோஷம், மகிழ்ச்சியாய் தேவனண்டைக்கு கடந்து வந்திட ஜெபிப்போம் – சங்கீதம் 67: 4
50. வாதைகள் மக்களை மேற்கொள்ளாதபடி காணப்பட ஜெபிப்போம் – சங்கீதம் 91: 10
51. சிற்றின்பப் பிரியர்கள் திருந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 21 :17
52. திருடுகிறவர்கள் திருந்திட ஜெபிப்போம் – 1 கொரிந்தியர் 6: 10
53. சபிக்கப்பட்டவர்களை தேவன் அழிவிலிருந்து காத்திட ஜெபிப்போம் – மத்தேயு 25: 41
54. மக்கள் குறிகேட்பதை விட்டு விலகி, அதின் மேல் உள்ள நம்பிக்கை அற்றுப்போக ஜெபிப்போம் – லேவியராகமம் 19: 31
55. துர்கிரியைகளில் உள்ளவர்கள் தங்களது துர்கிரியைகளை விட்டு, மெய் தெய்வத்தை அறிந்து கொள்ள ஜெபிப்போம் – கொலோசெயர் 1: 21
56. மக்களிடையே உள்ள வட்டிகள், கடன்கள் இல்லாமல் போக ஜெபிப்போம். – யாத்திராகமம் 22: 25
57. மக்களிடையே காணப்படும் வெறிகள், களியாட்டுகள் மறைந்திட ஜெபிப்போம் – கலாத்தியர் 5: 21



58. சமாதானம், நிம்மதி இல்லாமல் இருப்பவர்கள் இவற்றை இயேசுவால் மாத்திரமே தரமுடியும் என்பதை அறிந்திட ஜெபிப்போம் – 2 தெசலோனிக்கேயர் – 3: 16
59. நம்மை சுற்றியுள்ள 10 தெருக்களின் பெயர்களைச் சொல்லி ஜெபிப்போம் – சகரியா 8: 21
60. நம்மை சுற்றியுள்ள 10 ஊர்களின் பெயர்களை சொல்லி ஜெபிப்போம் – ஏசாயா 42: 16
61. நமது மாவட்டத்திற்காய் ஜெபிப்போம் – ஏசாயா 40: 3
62. குழந்தை தொழிலாளர்கள் இல்லாத நிலை ஏற்பட ஜெபிப்போம் –மாற்கு 10: 16
63. 10 தொழில்களின் பெயரை சொல்லி, தேவன் அத்தொழிலை ஆசீர்வதிக்கவும், அங்கு வேலை செய்கிறவர்கள் தேவனை அறிந்திட ஜெபிப்போம் – உபாகமம் 28: 8
64. கல்லூரியில் படிக்கும் எல்லா வாலிபருக்கும் ஞானத்தை தேவன் தந்திட ஜெபிப்போம் – தானியேல் 1: 17
65. ஒவ்வொரு கல்லூரிகளிலும் ஜெபக் குழுக்கள் ஏற்படுத்தப்பட ஜெபிப்போம் – தானியேல் 3: 17
66. எல்லாத் துறைகளிலும் ஜெபக் குழுக்கள் ஏற்படுத்தப்பட ஜெபிப்போம் – ரோமர் 15: 32
67. நம் நண்பர்களில் குறைந்தது 10 பேர்களின் பெயர்களை எழுதி, சொல்லி அவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – ஏசாயா 43: 21
68. குறைந்தது 10 மாவட்டங்களின் பெயரைச் சொல்லி அங்கு வாழும் மக்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – சகரியா 8: 23
69. குறைந்தது 10 கிராமங்களுக்காகவும், அங்குள்ளவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – சகரியா 8: 22
70. 10அரசியல் தலைவர்களின் பெயர்களை சொல்லி ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 2: 1
71. 10அதிகாரிகளின் பெயர்களைச் சொல்லி ஜெபிப்போம். –1 தீமோத்தேயு 2: 2
72. 5 அரசாங்க துறைகளைச் சொல்லி ஜெபிப்போம் – சகரியா 8: 22
73. மக்களின் கைகளின் பிரயாசத்தை தேவன் ஆசீர்வதிக்க ஜெபிப்போம் – சங்கீதம் 128: 2
74. மக்களிடையே காணப்படும் பேராசைகள் மறைந்திட ஜெபிப்போம் – பிரசங்கி 6: 9
75. குடும்பங்களிடையே காணப்படும் சண்டைகள் மறைய ஜெபிப்போம் – மத்தேயு 6: 14
76. பல ஆண்டுகளாய் குடும்பங்களிடையே காணப்படும் விரோதங்கள், பகைகள் எல்லாவற்றையும் தேவன் மாற்றிட ஜெபிப்போம் –கொலோசெயர் 3: 8,13

77. நாம் இருக்கும் ஊர்களில் வசிக்கும் மக்களை தேவன் சந்திக்க ஜெபிப்போம் – தானியேல் 9: 18
78. நம் உறவினர்கள் இருக்கும் ஊர்களில் வசிப்பவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – மத்தேயு 10: 11
79. கூட்டம் கூட்டமாய் விக்கிரக கோவிலுக்கு செல்கிறவர்கள் உண்மை தேவனை அறிந்திட ஜெபிப்போம் – ஆபகூக் 2: 18, 19
80. குடிசைப் பகுதியில் வாழும் மக்களை தேவன் இரட்சித்து ஆசீர்வதித்திட ஜெபிப்போம் – ஏசாயா 29: 19
81. குடிசைப் பகுதியில் வாழும் மக்களின் வாழ்க்கை நிலையை தேவன் உயர்த்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 13: 23
82. சகோதரர்களிடையே காணப்படும் கசப்புகள், சண்டைகள் மாறி ஒற்றுமையுடன் காணப்பட ஜெபிப்போம் – சங்கீதம் 133: 1
83. இனிவரும் அழிவிற்கு ஜனங்கள் தப்பித்துக் கொள்ள ஜெபிப்போம் – சகரியா 7: 13
84. பள்ளிக் குழந்தைகளை தேவன் பாதுகாத்து வழி நடத்திட ஜெபிப்போம் – சகரியா 13: 7
85. கிறிஸ்துவைப்பற்றியும், கிறிஸ்துவ மதத்தையும், கிறிஸ்துவர்களைக் குறித்தான தவறான கருத்துகள் மாறிட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 13: 45
86. குறைந்தது 10 அரசியல் கட்சிகளுக்காய் ஜெபிப்போம் – ஏசாயா 48: 17
87. தேவனை அறியாத நம் உறவினர்கள் 10 பெயர்களை சொல்லி ஜெபிப்போம் – சகரியா 10: 8
88. பொய் சாட்சிக்காரர்கள் இல்லாமல் போக ஜெபிப்போம் – நீதிமொழிகள் 19: 5
89. மக்கள் தீமை செய்வதை விட்டு நன்மை செய்திட ஜெபிப்போம் – கலாத்தியர் 6: 9
90. சோதனையில் சிக்கித் தவிப்பவர்களுக்கு நம் தேவன் உதவி செய்திட ஜெபிப்போம் – எபிரெயர் 2: 18
91. மக்களிடையே பொல்லாங்குகள் இல்லாமல் போக ஜெபிப்போம் – 2 கொரிந்தியர் 13: 7
92. எல்லா மக்களும் சத்தியத்தை அறிகின்ற அறிவை அடைந்திட ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 2: 4
93. கஷ்டப்பட்டு செய்கின்ற வேலைக்கான கூலியை மக்கள் பெற்றிட ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 5: 18
94. துர்க்குணத்தில் உள்ளவர்கள் தேவனிடம் சென்று மனந்திரும்பிட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 8: 22
95. வேலை செய்கிறவர்கள் பார்வைக்கு வேலை செய்யாமல் உண்மையாய் வேலை செய்கிறவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – கொலோசெயர் 3: 22



96. தற்புகழ்ச்சிகாரர்கள் திருந்திட ஜெபிப்போம் – 2 கொரிந்தியர் 10: 18
97. பிள்ளைகள் பெற்றோரை கனம் பண்ணிட ஜெபிப்போம் – எபேசியர் 6: 3
98. பெற்றோர்கள் பிள்ளைகளை சரியான முறையில் வளர்த்திட ஜெபிப்போம் – எபேசியர் 6: 4
99. வேலை செய்கின்றவர்கள் தங்கள் மேலாளர்களுக்கு கீழ்ப்படிந்திட ஜெபிப்போம் – எபேசியர் 6: 5
100. மனைவி, புருஷனுக்கு கீழ்ப்படிந்து நடக்க ஜெபிப்போம் – கொலோசெயர் 3: 18
101. மக்களிடையே காணப்படும் மேட்டிமையான சிந்தைகள் அகன்று போக ஜெபிப்போம் – ரோமர் 12: 16
102. வாலிபர்கள் பெரியவர்களை மதித்து கீழ்ப்படிந்து நடக்க ஜெபிப்போம் – பேதுரு 5:5
103. இயேசுகிறிஸ்துவை, கிறிஸ்தவர்களை வெறுக்கும் எதிர்க்கும் சவுல்கள் பவுல்களாக மாறிட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 26:9–22
104. மக்கள் துர் இச்சைகளினால் தங்களை கெடுத்துவிடாதபடி, தங்களை காத்து கொள்ள ஜெபிப்போம் – ரோமர் 13:14
105. மக்களுக்கு உலக, மாம்ச சிந்தனைகள் அகன்று இயேசுவின் சிந்தை மாத்திரமே அனைவரும் பெற்றிட ஜெபிப்போம் – பிலிப்பியர் 2:5
106. மக்களிடம் தெய்வ பயம் மேலோங்கிட ஜெபிப்போம் – சங்கீதம் 145:19
107. மக்கள் அநியாயத்தை விரும்பி அதை செய்யாமல் தங்களைக் காத்துக் கொள்ள ஜெபிப்போம் – ஓசியா 10:13
108. மாம்ச சிந்தனைகள் முற்றிலும் அகன்று போக ஜெபிப்போம் – ரோமர் 8:6
109. மக்கள் நற்கிரியை செய்ய தங்களை ஒப்புக் கொடுப்பதற்காய் ஜெபிப்போம் – 2 தெசலோனிக்கேயர் 2:17
110. மக்களிடையே வேலை செய்ய கூடாதபடி காணப்படும் தடைகள் மாறிட ஜெபிப்போம் – 2 தெசலோனிக்கேயர் 3:10
111. மக்கள் நீதியைப் பின்பற்றி அதையே விதைத்திட, அதன்படி நடந்திட ஜெபிப்போம் – ஓசியா 10:12
112. இழிவான ஆதாயத்திற்காய் தங்கள் வாழ்க்கையை கெடுத்துக் கொள்பவர்கள் மாறிட ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 3:8
113. தேவன் அருவருக்கின்ற அருவருப்பான செயல்கள் செய்கின்றவர்கள் திருந்திட ஜெபிப்போம் – 1 கொரிந்தியர் 6:9,10
114. மனிதனின் கையின் கிரியைகள் ஒழிந்து போவதற்காய் ஜெபிப்போம் – மீகா 5:13
115. பில்லிசூனியம் பண்ணுகின்றவர்கள் அதை நாடாமல் இருந்திட ஜெபிப்போம் – ஏசாயா 41:24
116. மக்கள் காம விகாரங் கொண்டு கர்த்தருக்கு விரோதமாய் பாவம் செய்யாதபடி காணப்பட ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 5:11

117. சுகபோகமாய் வாழ்கின்றவர்கள் அதைவிட்டு தேவனுக்காய் பாடு அனுபவிப்பதை தெரிந்து கொள்ள ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 5:6

118. மக்களிடையே காணப்படும் பேராசைகள் மறைந்து, போதும் என்கிற மன நிறைவு எல்லோருக்கும் கிடைத்திட ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 6:6

119. மாறுபாடான, தீங்கு செய்யும் இருதயம் உடையவர்கள் மாறிட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 11:20

120. மக்கள் தங்கள் கிரியைக்கு ஏற்ற நியாயமான பலனை மாத்திரமே பெற்றிட விரும்புகிறவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 16:8

121. பொய் சாட்சி சொல்லுகிறவர்கள் திருந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 19:9

122. மக்களிடையே காணப்படும் தீய நோக்கம் மறைந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 19:9

123. பணத்திற்காக தீமை செய்கின்றவர்கள் மாறிட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 28:20

124. சத்தியத்தை பலமுறைக் கேட்டும், ஆண்டவரிடம் வராமல் தங்கள் இருதயத்தை கடினபடுத்துகிறவர்கள் தேவனிடம் வந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 29:1

125. சத்திய வசனத்திற்கு கீழ்ப்படியாததின் மூலம் ஏற்படும் சாபங்கள் மாறிட ஜெபிப்போம் – தானியேல் 9:14

126. மக்கள் தாங்கள் செய்த பாவத்தினால் ஏற்பட்ட சாபங்கள் மாறிட ஜெபிப்போம் – நாகூம் 1:13

127. துர்புத்தி உள்ளவர்கள் திருந்திட ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 3: 8

128. அநேகர் வேதத்தை படித்திடவும் அதன் மூலம் நற்கிரியைகள் செய்திடவும் ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 3:16

129. எதிர்த்துப் பேசுகிறவர்கள் மனந்திரும்பிட ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 2:25

130. தங்கள் தகப்பனையும், தாயையும் சபிப்பவர்கள் திருந்திட ஜெபிப்போம் – யாத்திராகமம் 21:17

131. உலகில் காணப்படும் ஞானிகளும், அறிஞர்களும் உண்மை தெய்வத்தை அறிந்து, வாழ்க்கைக்குப் பின் நடக்கவுள்ள பயங்கரத்தை அறிந்து இரட்சிப்படைய ஜெபிப்போம் – சங்கீதம் 49:10–14

132. தங்கள் தகப்பனையும் தாயையும் அடிக்கிறவர்கள் மனந்திருந்திட ஜெபிப்போம் – யாத்திராகமம் 21:15

133. ஒழுங்கின்மையாய் இருப்பவர்கள் திருந்திட ஜெபிப்போம் – 1 தெசலோனிக்கேயர் – 5:14

134. மக்கள் தீமைக்குத் தீமை, பழிக்கு பழி செய்யாதபடி மன்னிக்கும் மனப்பான்மை பெற்றிட ஜெபிப்போம் – 1 தெசலோனிக்கேயர் 5:15



135. சகோதரர்களுக்குள்ளே விரோதத்தை ஏற்படுத்த நினைப்பவர்கள் திருந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 6:19

136. தீமையான வழியிலே நடக்கிறவர்கள் அவ்வழிகளை விட்டுத் திருந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 8:13

137. மதிகேடாய் நடக்கிறவர்கள் எல்லோரும் மாறிட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 11:22

138. கஞ்சனாய் இருக்கிற மக்கள் மாறிட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 11:24

139. மக்களிடையே காணப்படும் வீணான வாயாடித்தனங்கள் எல்லாம் காணப்படாமல் போக ஜெபிப்போம் – நீதிமொழிகள் 17:28

140. தன் தகப்பனுக்கும், தன் தாயிற்கும் செலுத்த வேண்டிய கனத்தையும், கடமையையும் செலுத்திட ஜெபிப்போம் – மத்தேயு 15:5

141. இந்நாட்களில் மரணங்கள் பல வழிகளில் வருகின்றது. அதை கடிந்து கொண்டு ஜெபிப்போம் – எபிரேயர் 2:14

142. மக்கள் மரணத்திற்கு ஏதுவான பாவங்கள் செய்யாதபடி தங்களைக் காத்துக் கொள்ள ஜெபிப்போம் – 1 யோவான் 5:16

143. கணவன் மனைவியிடையே பிரச்சனை, குழப்பங்கள் கொண்டு வருகிறவர்கள் மாறிட ஜெபிப்போம் – மாற்கு 10:9

144. மருத்துவத்துறையில் உள்ளவர்கள் இரட்சிக்கப்படவும், அவர்கள் தேவ ஞானத்தால் செயல்பட ஜெபிப்போம் – லூக்கா 5:31

145. மக்களுக்கு சம்பாதிக்கும் பெலனை தேவன் தந்திட ஜெபிப்போம் – உபாகமம் 8:18

146. தகப்பன், தாயின் சொல்படி கேட்காத, அடங்காத கீழ்ப்படியாத பிள்ளைகளுக்காய் ஜெபிப்போம் – உபாகமம் 21:18

147. மக்களில் அநேகர் மனந்திரும்பி, இரட்சிக்கப்பட்டு, தேவ ஆசீர்வாதங்களைப் பெற்றிட ஜெபிப்போம் – உபாகமம் 30:8,9

148. மக்கள் சட்டத்தைக் கடைபிடித்திடவும், வரிகளை சரியாக செலுத்திடவும் ஜெபிப்போம் – லூக்கா 20:25

149. தேவனுக்கும், தேவப்பிள்ளைகளுக்கும் விரோதமாய் எழும்பும், அதிகாரங்களும், அதிகாரிகளும், ஜனங்களும் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 4:28

150. ஆதரவற்று, ஒதுக்கப்பட்டு, புறக்கணிக்கப்பட்ட நிலையில் காணப்படும் குழந்தைகள், பெரியவர்கள், வாலிபர்கள், உடல் ஊனமுற்றவர்கள் ஆகியோரை தேவன் தாங்கிட நடத்திட ஜெபிப்போம் – சங்கீதம் 27:10

151. சபைகளுக்கு உபத்திரவங்கள், நெருக்கடிகள், பிரச்சனைகள் கொடுக்கிறவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 8:3

152. தேவனை எதிர்க்கும் கூட்டமெல்லாம் தேவனின் சித்தம் செய்கிறவர்களாய் மாறிட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 9:6

153. சிறையில் உள்ள ஒவ்வொருவரும் உண்மை தெய்வத்தை அறிந்து தேவனிடம் பாவமன்னிப்பை பெற்றிட ஜெபிப்போம் – சங்கீதம் 68:6
154. உண்மை தெய்வத்தை அறியமுடியாதபடி நாடெங்கும் ஜனங்களைச் சிதறடிக்கிறவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – சகரியா 10:2
155. மக்கள் எவ்வளவுதான் சம்பாதித்தும் அதன் பலனை அனுபவிக்க முடியாத நிலைகள் மாறிட ஜெபிப்போம் – ஆகாய் 1:9
156. மக்கள் அறியாமையினால் நம் தேவனுக்கு விரோதமாய் எழும்பி தேவனுக்குப் பகைஞராய் மாறிவிடாதபடி இருக்க ஜெபிப்போம் – நாகூம் 1:2
157. இயேசு கிறிஸ்துவைப்பற்றிய இரகசியங்களை எல்லா மதத்தினரும், புரிந்து கொண்டு நித்திய வாழ்விற்கு ஆயத்தமாகிட ஜெபிப்போம் – 1 தீமோத்தேயு 3:16
158. உண்மை தேவன் இல்லை என்று சொல்லி, அதன் மூலம் பலரை இடறலுக்கு கொண்டு வருகிறவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – மல்கியா 2:17
159. உண்மை தெய்வத்தை அறியாதபடி இருப்பவர்கள் உண்மை சத்தியத்தை ஒருமுறையாவது தங்கள் வாழ்க்கையில் அறிந்திட ஜெபிப்போம் – எசேக்கியேல் 3:11
160. சமாதானம் இல்லாதவர்களுக்கு தேவன் பூரண சமாதானம் தந்திட ஜெபிப்போம் – ஏசாயா 26:3
161. மக்கள் தங்களின் வாழ்க்கையில் ஏற்படும் தேவையற்ற பயங்கள், திகில்கள் எல்லாம் மாறிட ஜெபிப்போம் – ஏசாயா 54:14
162. அக்கிரம சிந்தை உடையவர்கள் தேவனிடத்தில் அதற்கான மன்னிப்பை பெற்றிட ஜெபிப்போம் – ஏசாயா 55:7
163. துக்கப்படுகின்ற, துயரப்படுகின்ற மக்களுக்கு தேவன் ஆறுதல் அளித்திட ஜெபிப்போம் – ஏசாயா 57:18
164. மக்களிடையே காணப்படும் துணிகரங்கள் மறைந்திட ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 3:4
165. மோசம் போய், மோசம் போக்குகிறவர்கள் (தானும் கெட்டு, அடுத்தவர்களும் கெட வேண்டும் என்று நினைப்பவர்கள்) மனந்திரும்பிட ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 3:13
166. மக்களிடையே, வேத வசனங்களைக் குறித்ததான தவறான கருத்துக்கள் இல்லாமல் போக ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 3:16, 17
167. இச்சைகளில் வாழ்ந்து கொண்டு, அதிலே புரண்டு கொண்டு இருப்பவர்கள் தங்கள் வாழ்க்கையை மாற்றிக் காத்திட ஜெபிப்போம் – யாக்கோபு 1 :14,15
168. சபிப்பவர்கள் பொறுமையுள்ளவர்களாய் மாறிட ஜெபிப்போம் – தீத்து 3,2
169. இருமனமுள்ளவர்கள் மாறிட ஜெபிப்போம் – யாக்கோபு 1:8



170. தங்கள் நோய்களுக்கு வைத்தியம் செய்ய முடியாத அளவிற்கு காணப்படுபவர்கள் தேவனிடம் சுகம், உதவி பெற்றிட ஜெபிப்போம் – 1 பேதுரு 2:24
171. மக்களிடையே உள்ள தந்திரங்கள் எல்லாம் மறைந்திட ஜெபிப்போம் – எபேசியர் 4:14
172. பாதாளத்திற்கு செல்லும் ஒவ்வொரு ஆத்துமாக்களையும் தேவன் தப்புவித்து மீட்டிட ஜெபிப்போம் – சங்கீதம் 49:15
173. வாலிபர்களுக்கு தேவன் பாதுகாப்பு தந்திட ஜெபிப்போம் – பிரசங்கி 11:9
174. வாலிபர்களுக்கு வரும் சோதனைகளிலிருந்து தேவன் அவர்களைப் பாதுகாத்திட ஜெபிப்போம் – 1 யோவான் 2:13
175. விளையாட்டுத் துறைகளில் உள்ள புகழ்பெற்ற 10 வீரர்களின் பெயர்களைச் சொல்லி அவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – செப்பனியா 3:17
176. சினிமாத் துறைகளில் உள்ளவர்களின் 10 பெயர்களை சொல்லி, அவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – செப்பனியா 3:20
177. முரட்டாட்ட குணமுள்ளவர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – ஏசாயா 65:2
178. மக்களிடையே காணப்படும், பேசப்படும் கெட்ட வார்த்தைகள் இல்லாமல் மறைந்திட ஜெபிப்போம் – எபேசியர் 4:29
179. சிறுவர்கள் தங்கள் சிறுவயதிலேயே ஆண்டவரை ஏற்று, தங்கள் வாழ்க்கையை அவருக்கு அர்ப்பணித்திட ஜெபிப்போம் – மத்தேயு 19:14
180. மக்களிடையே குற்றப்படுத்துகிற குணம் உடையவர்கள் மாறிட ஜெபிப்போம் – யாக்கோபு 4:12
181. சகோதரர்களுக்கு விரோதமாய், குற்றப்படுத்துகிற குணம் உடையவர்கள் திருந்திட ஜெபிப்போம் – யாக்கோபு 4:11
182. மக்கள் கோபப்பட்டு பாவத்தில் விழுந்து, வீழ்ந்துவிடாதபடி தங்களைக் காத்திட ஜெபிப்போம் – எபேசியர் 4:26
183. பொருளாசை உடையவர்கள் திருந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 23:5
184. பல ஆண்டுகளாய் வியாதியில் உள்ளவர்கள் உண்மையான தேவனை அறிந்து சபையிலே வந்து முற்றிலும் விடுதலை பெற்றிட ஜெபிப்போம் – ஏசாயா 40:28,29
185. அதிகாரிகளும், தலைவர்களும் சட்டத்தை மதித்து, தெய்வபயத்தோடு நடந்திட, நடத்திட ஜெபிப்போம் – 1 சாமுவேல் 13:14
186. மக்களிடையே காணப்படும் எல்லா மலட்டுத் தன்மைகளும் மறைந்திட ஜெபிப்போம் – உபாகமம் 7:14
187. மக்கள் பலருக்கு நன்மை செய்கிறவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – யாக்கோபு 4:17
188. மக்களுக்கு விரோதமாய் மக்கள் தீங்கு செய்யாதபடி, நினைக்காதபடி காணப்பட ஜெபிப்போம் – சகரியா 8:17

189. ஒவ்வொரு ஜனங்களும் தீர்மானிக்கப்பட்ட காலம் வரை, தேவனுக்கு சித்தமான இடத்தில் வாழ்ந்திடவும் தேவனை அறிந்திடவும், தேவன் அநுகிரகம் செய்ய ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 17:26,27

190. துன்பத்தோடு, கஷ்டத்தோடு, நம் தேவனிடம் வருபவர்கள், தேவனிடம் இளைப்பாறுதல் சந்தோஷம் சமாதானம் பெற்றிட ஜெபிப்போம் – மத்தேயு 11:28

191. அக்கிரமம் செய்கிறவர்கள் மனந்திரும்பிட ஜெபிப்போம் – மல்கியா 4:1

192. மக்கள் ஒவ்வொருவரும் பொறுமையுள்ளவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – யாக்கோபு 5:11

193. படிக்கின்ற ஒவ்வொரு பிள்ளைகளுக்கும் தேவன் ஞானத்தை தரவும், பாடங்கள் மனதில் தங்கவும் ஜெபிப்போம் – ஏசாயா 54:13

194. மக்கள் பிசாசின் கண்ணிக்கு நீங்கலாகி தங்களைக் காத்துக் கொள்ள ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 2:26

195. தேவையற்ற வீண்வார்த்தைகளை பேசிக்கொண்டு இருப்பவர்கள் மாறிட ஜெபிப்போம் – மத்தேயு 12:36

196. முதியோருக்கு, தேவன் பெலன் தந்து ஆதரவாய் இருந்திட ஜெபிப்போம் – சங்கீதம் 92:15

197. தேவன் ஒவ்வொரு மக்களையும் ஆசீர்வதித்திட, இரட்சித்திட ஜெபிப்போம் – சங்கீதம் 91:16

198. மக்கள் இரண்டகம் பண்ணாதபடி காணப்பட ஜெபிப்போம் – 1 சாமுவேல் 15:23

199. மக்களிடையே காணப்படும் முரட்டாட்ட குணம் மாறிட ஜெபிப்போம் – 1 சாமுவேல் 15:23

200. மக்கள் சுவிசேஷத்தைக் கேட்கும் போது இருதயம் கடினப்படாமல் சத்தியத்தை ஏற்றுக்கொள்ள ஜெபிப்போம் – எபிரேயர் 4:7

201. நீதித்துறையில் உள்ள ஒவ்வொருவரும் உண்மையாய், நேர்மையாய் வாதாடவும், தீர்ப்புச் சொல்லிடவும் ஜெபிப்போம் – யாக்கோபு 7:24

202. பிசாசின் இச்சைகளுக்கு செவிகொடுத்து, அதில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் அதிலிருந்து மீண்டு விடுதலை பெற்றிட ஜெபிப்போம் – 2 தீமோத்தேயு 2:26

203. தெய்வபயம் இல்லாமல் செல்வத்தின் மிகுதியால் பெருமையில் காணப்படும் மக்கள் சந்திக்கப்பட ஜெபிப்போம் – சங்கீதம் 52:1–7

204. ஒவ்வொரு மக்களும், 'எனக்காக', 'என் பாவத்திற்காக', இயேசு கிறிஸ்து மரித்தார் என்பதை உணர்ந்திட ஜெபிப்போம் – ஏசாயா 53:4,5

205. ஒவ்வொருவருக்குள்ளிருக்கும் பாவங்கள் முற்றிலும் இல்லாமல் போக ஜெபிப்போம் – ரோமர் 7:17

206. பாவ இச்சைகள் குறைந்திட ஜெபிப்போம் – ரோமர் 7:5



207. அடிதடிகள் மற்றும் தேவையற்ற வன்முறை சண்டைகளில் பிரியப்படுவோர், ஈடுபடுவோர் அதனை விட்டு விலகிட ஜெபிப்போம் – ஆதியாகமம் 9:6

208. மக்கள் ஏக சிந்தையுள்ளவர்களாய் காணப்பட ஜெபிப்போம் – ரோமர் 12:16

209. மக்களிடையே அன்பு மாயமற்றதாய் இருக்க ஜெபிப்போம் – ரோமர் 12:9

210. மக்களிடையே காணப்படும் மனக் கடினங்கள் மாறிட ஜெபிப்போம் – ரோமர் 2:5



# 3. நம் இந்தியாவுக்காக ஜெபிப்போம்

## 3. PRAY FOR OUR INDIA

1. நமது இந்தியாவை தேவன் ஆசீர்வதித்திட ஜெபிப்போம் – சங்கீதம் 3:8
2. நம் நாட்டின் பொருளாதாரத் தேவைகள் சந்திக்கப்பட ஜெபிப்போம் – சங்கீதம் 104:24
3. நம் நாட்டின் கடன்கள் அடைக்கப்பட ஜெபிப்போம் – மத்தேயு 6:12
4. நம் நாட்டில் உள்ள தலைவர்களுக்காகவும், அரசியல்வாதிக்காகவும் அவர்கள் இரட்சிக்கப்படவும் ஆசீர்வதிக்கப்படவும் ஜெபிப்போம் – யூதா 1:21
5. நம் நாட்டில் உள்ள உயர் அதிகாரிகள், அரசாங்க அதிகாரிகள் இரட்சிக்கப்படவும் ஆசீர்வதிக்கப்படவும் ஜெபிப்போம் – மத்தேயு 25:21
6. நம் நாட்டில் உள்ள மூடப்பழக்கவழக்கங்கள் மறைய ஜெபிப்போம் – நீதிமொழிகள் 10:21
7. நம் நாட்டில் உள்ள வேலையின்மை மாறிட ஜெபிப்போம் – எபேசியர் 4:28
8. நம் நாட்டில் உள்ள விபச்சார வேசித்தனங்கள் மறைந்திட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 15:20
9. நம் நாட்டில் உள்ள லஞ்சம், ஊழல் குறைந்திட ஜெபிப்போம் – யோபு 15:34
10. நம் நாட்டில் உணவுப்பற்றாக்குறைகள் எல்லாம் மாறிட ஜெபிப்போம் – சங்கீதம் 74:14
11. நம் நாட்டில் சுவிசேஷத்திற்காய், கிறிஸ்துவுக்காய் உபத்திரவப் படுகிறவர்களை தேவன் தாங்கி, ஆறுதல் செய்து நடத்திட ஜெபிப்போம் – 2 கொரிந்தியர் 1:4,8
12. நம் நாட்டைச் சுற்றியுள்ள, நாடுகளிடையே சுமூக உறவு காணப்பட ஜெபிப்போம் – நியாயாதிபதிகள் 8:28
13. நம் நாட்டில் வறுமைக் கோட்டிற்கு கீழ் உள்ளவர்களின் நிலைமை மாறிட ஜெபிப்போம் – ஆதியாகமம் 45:11
14. நம் நாட்டில் அறியாமையினால் ஏற்படுகின்ற திருமணங்கள் தடுக்கப்பட ஜெபிப்போம் – 1 பேதுரு 2:15
15. எல்லா இடத்திலும் எல்லோருக்கும் கல்வி கிடைத்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 1:7
16. நம் நாட்டில் உள்ள பேதமைகள் ஒழிந்திட ஜெபிப்போம் – நீதிமொழிகள் 9:6
17. நம் நாட்டில் உள்ள ஆதரவற்ற குழந்தைகள் நிலை மாறிட ஜெபிப்போம் – சங்கீதம் 10:14
18. நம் நாட்டில் கொள்ளை நோய்கள் வராமல் காணப்பட ஜெபிப்போம் – சங்கீதம் 91:6
19. நம் நாட்டில் உள்ள வன்முறைகள் எல்லாம் மறைந்திட ஜெபிப்போம் – 2 தெசலோனிக்கேயர் 3:15



20. நம் நாட்டில் உள்ள சிற்றின்பங்கள், சிற்றின்ப விடுதிகள், பொழுதுபோக்கு காரியங்கள் குறைந்திட ஜெபிப்போம் – லூக்கா 8:14
21. நம் நாட்டில் உள்ள திருட்டுகள் முற்றிலும் குறைந்திட ஜெபிப்போம் – எபேசியர் 4:28
22. நம் நாட்டின் தலைவர்கள், மக்களுக்குப் பயன்படும் திட்டங்களை மாத்திரமே செயல்படுத்திட ஜெபிப்போம் – லூக்கா 22:26
23. நம் நாட்டில் காணப்படும் தீய பழக்க வழக்கம் முற்றிலும் மறைந்திட ஜெபிப்போம் – ஏசாயா 1:16
24. தேசத்தில் காணப்படும் அடிமைத்தனங்கள் முற்றிலும் மறைந்திட ஜெபிப்போம் – ரோமர் 8:20
25. நம் நாட்டில் உள்ள கொள்ளையர்கள் திருந்திட ஜெபிப்போம் – 1 கொரிந்தியர் 6:10
26. நம் நாட்டில் உள்ள பற்றாக்குறைகள் மாறிட ஜெபிப்போம் – யாக்கோபு 1:14
27. நம் பாரத தேசம் எழுப்புதல் அடைந்திட ஜெபிப்போம் – ஆபகூக் 2:20
28. நம் தேசம் உயிர் மீட்சி அடைந்திட ஜெபிப்போம் – மல்கியா 3:1
29. பாராளுமன்ற உறுப்பினர்கள் இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – நெகேமியா 1:10
30. மத்திய அரசில் உள்ள தலைவர்கள் தேவனை அறிந்திடவும் ஆசீர் வதிக்கப்படவும் ஜெபிப்போம் – சங்கீதம் 67:1
31. மாநில அரசில் உள்ள தலைவர்கள் தேவனை அறிந்திடவும் ஆசீர் வதிக்கப்படவும் ஜெபிப்போம் – சங்கீதம் 64:9
32. நாடாளுமன்றத்தில் உள்ளவர்கள் இரட்சிக்கப்படவும் ஆசீர்வதிக்கப்படவும் ஜெபிப்போம் – நெகேமியா 1:11
33. நம் நாட்டில் உள்ள முஸ்லீம் சகோதர, சகோதரிகள் ஆசீர்வதிக்கப்பட, இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – ஆதியாகமம் 17:20
34. நம் நாட்டில் உள்ள இந்து சகோதர, சகோதரிகள் ஆசீர்வதிக்கப்பட, இரட்சிக்கப்பட ஜெபிப்போம் – யோவேல் 2:21
35. இந்தியாவைச் சுற்றியுள்ள 5 நாடுகளின் பெயர்களை சொல்லி ஜெபிப்போம் – செப்பனியா 3:15
36. இந்தியாவில் உள்ள எல்லா மாநிலங்களுக்காகவும், கூடுமானால் இந்திய வரைபடத்தின்மேல் கைகளை வைத்து விசுவாசத்துடன் ஜெபிப்போம் – செப்பனியா 2:3
37. நம் நாட்டிற்கு சுதந்திரம் வாங்கித்தந்த தியாகிகளுக்கும் அவர்கள் குடும்பத்திற்காகவும் ஜெபிப்போம் – எபிரேயர் 11:34
38. தற்போது நம் நாட்டைப் பாதுகாக்கும் நம் நாட்டு வீரர்கள் பாதுகாப்பிற்காகவும் அவர்கள் குடும்பத்திற்காகவும் ஜெபிப்போம் – எபிரேயர் 10:35
39. நம் நாட்டில் உள்ள எல்லா கிராமங்களிலும் குறைந்தது ஒரு சபையாவது காணப்பட ஜெபிப்போம் – அப்போஸ்தலர் 8:25

